ஆறுமுகனருட் கழக வெளியீடு—2



உ

குகமயம்,

வேலுமயிலுந் துணை.

திருநெல்வேலி,

திருப்பணி ஸ்ரீ ஆறுமுகநயினார்

# மயிற்கும்மி,

# சேவற்கும்மி.



திருமலை ஸ்ரீ முருகன் தேவஸ்தானம்

பொருளாதரவில்,

நெல்லை ஆறுமுகனருட் கழகத்தாரால்

வெளியிடப்பெற்றன.

அச்சுக்கூடம், திருநெல்வேலி.



ங்கீரஸஹு — 1932. [அணா 2.

ஆறுமுகனருட் கழக வெளியீடு—2.



உ

முருகன் துணை.

திருநெல்வேலி,

# திருப்பணி ஸ்ரீ ஆறுமுகநயினர்

# மயிற்கும்மி,

# சேவற்கும்மி

(இனிய தோத்திரப்பாக்களுடன்)

இவை

மகான் வண்ணச்சரபம், ஸ்ரீலஸ்ரீ

முருகதாச சுவாமிகள் மாணாக்கரும், திருப்பணி

ஆறுமுக நயினர் பிள்ளைத்தமிழ்,

கிளிக்கண்ணி, திருப்புகழாசிரியருமான

கோபாலசமுத்திரம்,

திரு. ச. சண்முகதாச பிள்ளையவர்கள்

இயற்றியது.

திருமலைமுருகன் தேவஸ்தானம்

பொருளுதவிபெற்று,

நெல்லை ஆறுமுகனருட் கழகத்தாரால்

வெளியிடப்பெற்றன.

திருப்பணி, ஸ்ரீ ஆறுமுகநயினர் சந்நிதானம்,

திருநெல்வேலி.



விலை] ஆங்கீரஸஹு—1932 [அணா 2

# கந்தரலங்காரம்.

விழிக்குத் துணைதிரு மென்மலர்ப் பாதங்கள்
மெய்ம்மைகுன்ரு
மொழிக்குத் துணைமுரு காவெனு நாமங்கள்
முன்புசெய்த
பழிக்குத் துணையவன் பன்னிரு தோளும்
பயந்ததனி
வழிக்குத் துணைவடி வேலுஞ்செங் கோடன்
மயூரமுமே. 1.

பாலே யனைய மொழியார்த மின்பத்தைப்
பற்றியென்று
மாலேகொண் டுய்யும் வகையறி யேன்மலர்த்
தாடருவாய்
காலே மிகவுண்டு காலே யிலாத
கணபணத்தின்
மேலே துயில்கொள்ளு மாலோன் மருகசெவ்
வேலவனே 2.



## திருச்செந்திற் கலம்பகம்.

மெய்யன்பு (கலிப்பா) பிரார்த்தனை.

"தம்பிரான் செந்திலிற் சாவணத் துதித்தோ
னம்பொனர் கழலிணை யன்புறப் பணிந்தோ
ரும்பராய் மன்னுவ ருயர்நிலே யடைந்தே."

"பணிப்பகை மயிலுஞ்சேவற் பதாகையும் பன்னிரண்டு
மணிக்குழை களுமோரா று வதனமும் வாகைவேலும்
தணிப்பசுங் கடப்பந்தாருந் தண்டையுந் தாளுநாளுங்
கணிப்பருஞ் செந்திலா யென் கருத்தைவிட் டகன்றிடாவே."

"சேவலு மயிலு வாழ்க."

உ

குகமயம்.

# முகவுரை.



திருவளர்ந்தோங்குந் தக்ஷிணகைலாயமென்றும், வேணுவனக்ஷேத்திரமென்றும் நாமதேயம் பெற்ற இந் நெல்லைமாநகரில் ஸ்ரீ காந்திமதி நெல்லையப்பர் ஆலய மேலைப் பிராகாரத்திற் கலியுகவரத மூர்த்தியாய்த் திருக்கோயில் கொண்டிருக்கும், திருப்பணி ஸ்ரீ ஆறுமுகநயினார் பேரில் இந் நூலாசிரியரவர்களால் பிள்ளைத்தமிழ், கிளிக்கண்ணி, திருப் புகழ் முதலியன இயற்றப்பெற்று, மெய்யன்பர்களின் பொரு ளாதரவில் நமதாறுமுகனருட் கழகத்தாரால் வெளியிடப் பெற்றுலாவுவது பக்தகோடிகளிற் பெரும்பாலாரறிந்ததே.

மேலும் இக்கழகத்தார் வேண்டுகோளின்படி, ஷடி ஆசிரியரவர்களா லியற்றிய (செந்தமிழ்நயமும், பொருள் நயமும், பக்திச் சுவையும், அன்பைக் கவருமருட்டன்மை யும், ஒருங்கே நிறைந்தொழுகும்) மயிற்கும்மி, சேவற்கும்மி யடங்கிய இந்நூலைப் பாலர்கள்முதல் பெரியோர்கள்வரை பிரார்த்தனையாகவும், மங்களநிறைந்தவிடங்களிலும், (நமதாறு முகவள்ளலின் உத்தம வாகனமாகிய மயிலின் பெருமையை யும், சிறந்தகொடியாகிய சேவலின் பெருமையையும்) எளிதிற் படித்தறியும்பொருட்டு, இக்கழகவாயிலாக வெளியிடவேண்டி விருப்புற்று, அதற்கானபொருளுதவியளித்த திருமலைஸ்ரீமுரு கன் தேவஸ்தானம் தர்மகர்த்தர்கள், திரு T. S. செண்பகம் பிள்ளையவர்களுக்கும், V. S. சுப்பையா பிள்ளையவர்களுக்கும், இந்நூலாசிரியரவர்களுக்கும் இக்கழகத்தார் மிகுதியும் நன்றி பாராட்டக் கடமைப்பட்டுள்ளார்கள்.

இந்நூலை அன்புற்றுப் படிப்பவர்களுக்கும், அங்ஙனமே யிந்நிலவுலகிற் பரவச்செய்தவர்களுக்கும் (அருணகிரிநாதர் திருப்புகழில் ''செம்பொன்மயில்மீதி லேயெப்போது வருவாயே'' "அண்டருபகார சேவற்கார முடிமேலே'' என உளமுருகித்துதித்தற்கிணங்க) ''செந்தமிழ் சொல்பாவின் மாலைக்காரனும், படைத்தளித்தழிக்குந் திரிமூர்த்திகள் தம்பிரானுமான'' ஸ்ரீசண்முகப்பெருமான் தனது மயில் மூலமாகவும், சேவல் மூலமாகவு மவரவர் குறைகளைத் தெரிந்து, உடன் தவிர்த்து நித்தியானந்தப் பெருவாழ்வை யளிப்பரென்பது பன்முறையுமுண்மை.

''வேண்டு மடியவர் புலவர் வேண்ட அரிய பொருளை
வேண்டு மளவி லுதவு பெருமாளே.''

1107—ஆங்கிரஸ, சித்திரை, 8௳ — ஆறுமுகனருட் கழகத்தார், நெல்லை.



வேலுமயிலுந்துணை.




முருகப்பெருமான் உலகத்தை வலம் வந்தது

Block lent by The Alliance Co., Mylapore.

ஆறுமுகனருட் கழகம்,

நெல்லை.

உ

முருகக் கடவுடுணை.

திருநெல்வேலி,

திருப்பணி ஸ்ரீ ஆறுமுகநயினர்,

# மயில்வாகனக் கும்மி.

---

## விநாயகர் வணக்கம்.

செந்திலைப் போன்றநெல் வேலிய றுமுகச்
* சேந்தன்ம யிற்கும்மிப் பாட்டுரைக்கத்
தந்திமு கத்தொரு தானவ னைக்கொன்ற
சந்திவி நாயகன் காப்பாமே — பெருந்
தொந்திவி நாயகன் காப்பாமே 1.

* சேந்தன் — முருகன்.

## கும்மிகள்.

மாமலர்ப் பைம்பொழி னெல்லைக் குகனிரு
மாதரு டன்றினம் வாழ்ந்துவக்குஞ்
சாமளத் தோகைம யிற்பரி வான்புகழ்
சாற்றிக் கும்மிய டிப்பமடி — மிகப்
போற்றிக் கும்மிய டிப்பமடி. 2.

ஓங்கார மேவடி வாகிக்கு லாவியொ
ருகொடி யிற்புவி யெங்கும்வலம்
பாங்காக வந்தப சுமயின்(ல்)மேன்மையைப்
பாடிக் கும்மிய டிப்பமடி — குழுக்
கூடிக் கும்மிய டிப்பமடி. 3

சேலுறழ் கட்குற மானைப்ப ராவிய
செவ்வேள்வ லக்கையில் வீற்றிருக்கும்
வேலுட னேதுணை யாய்வரு ‡ மஞ்ஞைசீர்
விண்டு கும்மிய டிப்பமடி — யன்பு
கொண்டு கும்மிய டிப்பமடி. 4.

‡ மஞ்ஞை — மயில்.

மாலமர்ந் துள்ள § க லுழனைத் தின்றமிழ்
வாய்ப்பச்சை மாமயில் வல்லபத்தை
மூலப்பொ ருண்முரு கேசனு டன்சேர்த்து
முன்னிக் கும்மிய டிப்பமடி — திறல்
பன்னிக் கும்மிய டிப்பமடி. 5.

§ கலுழன் — கருடன்.

சச்சிதா னந்தமி குந்தகந் தப்பனைத்
தாங்கும்பெ ருமைப டைத்தபுகழ்
உச்சிதப் பல்லாயி ரகோடி யண்டமு
மோங்கக் கும்மிய டிப்பமடி — பவ
நீங்கக் கும்மிய டிப்பமடி. 6.

பாற்றண்ட ரங்கச்ச முத்திரத் தூடரி
பார்த்துறங் காதிப்ப டப்பாம்பைக்
காற்றண்டை யாகப்பு னைந்த † சி கிப்புகழ்
கணித்துக் கும்மிய டிப்பமடி—யகந்
துணித்துக் கும்மிய டிப்பமடி.

† சிகி — மயில். 7.

பச்சைநி றத்தைனி ரும்பிக்க திர்ப்பரி
பார்ப்பதி மாலரி தோய்நிறமுஞ்
செச்சைம லர்த்தொடை பூண்டசெவ்வேலன்
சிகியினி றத்துக்கொப் பாகாதே—யந்த

* முகிலினி றத்துக்கொப் பாகாதே. 8.

* முகில் — மேகம்

சமரச மெய்ஞ்ஞானச் சத்தியொ டுவரத்
தக்கம யினிறத் தோகைகளைச்
சமணம தக்குரு வுஞ்சிறி தாகிலுங்
தள்ளிட வில்லைய துநிசமே — யாரு
மெள்ளிட வில்லையி துநிசமே. 9.

திருவரு ணைத்திருக் கோபுரச் செந்தமிழ்ச்
சீர்ச்§கிளிக் கோமுனி வேண்டியநா
ளொருகணத் திற்குக னோடுமுன் வந்தாண்ட
தோதிக் கும்மிய டிப்பமடி — மறை
நீதிக் கும்மிய டிப்பமடி. 10.

§ கிளி — அருணகிரிநாதர்.

அவிருநூற் றெட்டுக மெய்யழி யாதண்ட
மாயிரத் தெட்டும ரசாண்டு
கவினுறு சூருடற் பாதிம யிலான
காட்சியைக் கும்மிய டிப்பமடி — யரு
ளாட்சியைக் கும்மிய டிப்பமடி 11.

வானக முட்டிவ ளர்ந்துவி ளங்கிய
மாடநெ ருங்குநெல் வேலியிலே
ஞானமி குத்துப்பெ ருந்தவஞ் செய்கின்ற
நாவல ருக்கும ருள்வழங்குந் — தமிழ்ப்
பாவல ருக்கும்பொ ருள்வழங்கும். 12.

§வேணுவ னநாதர் கோவிலி லேயெழின்
மேவுமே லைப்பிர காரத்திலே
மாணுறு கோவிலில் வாழ்குகன் ‡மஞ்ஞைசீர்
வாழ்த்திக் கும்மிய டிப்பமடி — யின்பத்

தாழ்த்திக் கும்மிய டிப்பமடி. 13.

§ வேணு — மூங்கில். ‡ மஞ்ஞை — மயில்.

காசிப மாமுனி தந்தவெஞ் சூரனற்
கட்டமுற் றுப்பல வாறுழன்ற
* வாசவன் பொன்னகர் வாழவைக் குங்குகன்
வாசஞ்செய் கின்றசி காவளமே — யிடர்
நாசஞ்செய் கின்ற‡சி காவளமே. 14.

* வாசவன் — இந்திரன். ‡ சிகாவளம் — மயில்.

கந்தம லிந்தசெ ழுந்தக ரக்குழற்
காந்திமதியம்மை சேர்த்தெடுத்துத்
தந்தமி குந்தவ ரந்தரு கந்தனைத்
தாங்கும ரகத மாமயிலே — யெழி
லோங்கும ரகத மாமயிலே. 15.

மண்டலத் துள்ளாரும் விண்டலத் துள்ளாரு
மற்றோருங் கற்றோரும் போற்றிடவே
யண்டம ளாவக்க லாபச்சி றைவிரித்
தாடும யிற்பரி வாகனமே — புகழ்
நீடும யிற்பரி வாகனமே. 16

பூவல யத்தெங்கு மோர்கொடிப் போதுக்குண்
மாவலம் வந்தம யிற்பரியே
சேவலு டன்குகன் போமிட மெங்கணுஞ்
செல்லும்ப சுஞ்சிறைக் கேகயமே—நயம்
புல்லும்ப சுஞ்சிறைக் §கேகயமே. 17.

§ கேகயம் — மயில்.

பத்திமி குத்துவ யிராகம் பெற்றுப்
பாஞான முற்றத போதனர்க்குச்
சித்தியெட் டுந்தருங் கந்தனை றும்படிச்
சிர்நிழ லைச்செயு §மாயூரமே — யணி

யார்நிழ லைச்செயு மாயூரமே. 18.

§ மாயூரம் — மயில்.

வானக மெங்கும ளாவப்ப சுந்தோகை
வாலையுந் தூக்கிவி ரித்தாடுங்
கானச்*சி கண்டியே யிப்போது கந்தனைக்
காணக்கொ டுவந்து காட்டுதியே—நானும்
பேணக்கொ டுவந்து காட்டுதியே. 19.

*சிகண்டி — மயில்.

செங்கதிர் காமத்தி லேயிரு பாவலர்
செப்பிய போதே வாயரவை
யங்கண்வி டுத்தெடுத் திட்ட‡கே தாரமே
யாறுமு கற்கொண்டு வந்தருள்வா—யழ
கேறுமு கற்கொண்டு வந்தருள்வாய் 20.

‡ கேதாரம் — மயில்.

நண்பும லிவீர பாண்டியன் வேண்டிய
நாட்கடன் மார்க்கமா யப்போதே
பண்பும ருகனைக் கொண்டுவந் துவிட்ட
பச்சை†ஞ மலிப்புள் வாகனமே—குக
னிச்சைஞ மலிப்புள் வாகனமே 21.

† ஞமலிப்புள் — மயிற்பக்ஷி.

அந்தமு றநேல்லைக் கோவிலி லேதிக
ழாறுமு கன்சந்நி தானத்திலே
சந்தக்க விஞரும் வந்துதி னந்தொழுஞ்
சச்சிதா னந்தக்கு லமயிலே — வள
ருச்சிதா னந்தக்கு லமயிலே 22.

ஆயிரம் வாயுடை யாதிய னந்தனு
மட்டதி சைநாக மும்பதற
மாயிரு ஞாலத்திற் கூவிய டிக்கின்ற
வன்சிறைப் புள்*ளோக ரப்பரியே—பசும்
பொன்சிறைப் புள்ளோக ரப்பரியே. 23.

* ஒகப்பரி — மயில்வாகனம்.

கோமளப் பார்ப்பதி யோகுற வள்ளியோ
கொண்டலோ மாயனோ வென்றிலங்குஞ்
சாமளப் பச்சைநி றப்பொலி யுந்தோகை
தங்குமெ ழின்மயில் வாகனமே—யருட்
பொங்குமெ ழின்மயில் வாகனமே. 24.

மிக்கசந் தோடம்வி ளைக்கின்ற வாழ்க்கையை
வேண்டிப்பு லனைந்து முள்ளடக்கித்
தக்கபெ ருந்தவஞ் செய்கின்ற தானவர்
சாதியில் வந்தம யிற்பரியே—சூரன்
பாதியில் வந்தம யிற்பரியே. 25.

கரவட மற்றரு ணைத்†தளித் தூணிடங்
கந்தனைச் சேவிக்கும் போதனையும்
‡பிரபுட தேவம காராச னுங்கண்டு
பேணிப்ப ணிந்த*பி ணிமுகமே — வளந்
தோணிப்ப ணிந்தபி ணிமுகமே. 26.

† தளி — கோயில். * பிணிமுகம் — மயில்.
‡ பிரபுடதேவ மகராசன்— (அருணகிரிநாத சுவாமிகள் காலத்தில்)
திருவண்ணாமலையை யாண்ட வரசன்.

சதுர்வளர் நெல்லைத்த லத்தொளிர் வண்ணச்
சரபத்தி ருப்புகழ் மாமுனிவன்
மதுரம்பெறு கனிகண்டமு துறளின்சுவை மலிசெந்தமிழ்
மயிலலங் காரங்கொ ளுமயிலே — கந்தன்

பயிலலங் காரங்கொ ளுமயிலே. 27.

செகமுழுக் கத்துதி செய்திடு நெல்லைச்
சிவகுரு தேசிகன் சந்நிதியிற்
றிகழப்படு கனகத்துறு*குலிசப்படை ‡யயில்வைத்தவிர்
செங்கைக்கு கன்மயில் வாகனமே—குற
மங்கைக்கு கன்மயில் வாகனமே. 28.

* குலிசம் — வச்சிராயுதம். ‡ அயில் — வேல்.

பதினெட்டுக் கண்ணுடைப் பண்ணவனேறிய
பாரப்ப சுமயில் வாகனமே
யதிமாதவ கவுமாரர்க டுதியோதிட முருகோனுட
னந்தித்துச் சேவைய ளித்தருள்வாய்—நிதஞ்
சிந்தித்துச் சேவைய ளித்தருள்வாய். 29.

அம்மாவா சைப்பெரி யோனுல்வி ளக்கிய
வாண்டவன் சந்நிதா னத்தினிலே
யகரத்தினை நிகர் பச்சுரு மினிரத்தின நடமிட்டவி
ரானந்த மாக்கும ணிமயிலே — பவ
வீனந்த நீக்கும ணிமயிலே. 30.

தண்முகத் தம்மாவா சைத்தவ மாமுனி
தான்சொல்லி யபடி தப்பாமற்
சண்முக தாசக்க விராச னன்பொடு
சாற்றுமிந் தக்கும்மி வாழ்க நிதம்—களிப்
பாற்றுமந் தக்கும்மி வாழ்க நிதம். 31.

முற்றிற்று.

மயில்வா கனவேள் மலரடி யேதுணை.

உ

முருகக் கடவுடுணை

# திருநெல்வேலி,

## திருப்பணி ஸ்ரீ ஆறுமுகநயினர்,

# சேவற் கும்மி.

---

அந்திநி றச்சிவ னெற்றிவி ழிப்பொறி
ஆறுமொ ருகுருந் தாகியவே
எந்தித்தவிர் குன்றெருத்தவிர் செம்பொற்புய நின்றுக்கி
மாகத்தி னங்கூவு *குக்குடமே—களிப்
பாகத்தி னங்கூவு குக்குடமே 1.

நெல்லைம ழைத்தண்ணீர் சூழ்ந்துசெல்லும் போதந்
நீரைத்தி ருவேலி யாகச்செய்த
நெல்லைப்பதி யில்வச்சிரம் வைதுற்றயில் கொள்கைக்குக
னீண்டபு யக்கிரிக் குக்குடமே—யணி
பூண்டபு யக்கிரிக் குக்குடமே. 2.

* குக்குடம் — கோழி.

தேனுரைக் குஞ்சரி சீதேவி மாலேறு
செங்கரு டன்செவ்வாய் நான்முகவன்
வானந்தனி லேதுங்கதி ரோனுந்தின நாணும்படி
மாணிக்கம் போன்றொளிர் குக்குடமே—திக
ழாணிப்பொன் போன்றொளிர் குக்குடமே. 3.

பிரசம லர்ப்பொழில் வேணுவ னத்திரு
பெண்ணரி ருவர்க்கு மத்தியுற்ற
வரதன்கிரி நிகர்திண்புய நடுநின்றுல கினமெங்கணும்
வாழ்வுறக் கூவுகோ ழிக்கொடியே—நித்தந்
தாழ்வறக் கூவுகோ ழிக்கொடியே. 4.

## சேவற்கும்மி.



செந்நிறச் சோதிகு லாவிய செஞ்சிறைச்
சேவற்றி ருக்கொடி யேயாறு
சென்னிக்குகன் மன்னுத்தமன் முன்னுற்றென தின்னற்றுயர்
தீர்த்தருட் செய்திட லொண்ணுதோ—நீகண்
பார்த்தருட் செய்திட லொண்ணுதோ. 5.

வெண்கயி லாயமோ வேதன் றிருநாவோ
* விண்டுகைச் சங்கமோ வென்றிலங்கி
விண்ணிற்கலை மின்னச்செலும் வண்ணச்‡சசி யென்னத் [திகழ்
வெண்ணிற மேவிய குக்குடமே—முத்துத்
தண்ணிற மேவிய குக்குடமே. 6.

* விண்டு—திருமால். ‡ சசி—சந்திரன்.



முன்னுல கத்துள்ள சீவர்க ளையெல்லா
‡ முண்டகக் கையாற்ப டைக்குமயன்
றன்னற்புத வெண்மைத்திற லன்னப்பறை முன்னுற்றயி
றன்மைப டைத்தசே வற்கொடியே—வெகு
நன்மைப டைத்தசே வற்கொடியே. 7.

‡ முண்டகம் — தாமரை.

சாபத்தி னுல்வந்த வேடரு நம்பித்
தலைவனும் போர்செய்த காலத்திலே
கோபக்கனன் மீறிக்குல நாசப்பட வீரத்தொடு
கூவிய கோழித்தி ருக்கொடியே—மேன்மை
மேவிய கோழித்தி ருக்கொடியே. 8.

மாமிசங் கள்ளாக் காதியுண் ணுமலே
மாதவஞ் செய்கின்ற மேலவருங்
காமத்துழ லாமற்சுக மேலற்புத வாழ்வைத்தரு

கந்தன்க ரத்துறு ‡ வாரணமே—யந்தச்
சொந்தன்க ரத்துறு வாரணமே 9.
‡ வாரணம்—கோழி.

பூகப்பொ ழினெல்லை மாநகர்ச் செஞ்சூட்டுப்
போர்த்திருக் காலாயு தக்கொடியே
நீகந்தன்மு னேசென்றொரு வாறன்புட னேயென்குறை
நீக்கிடச் சொல்லுத லொண்ணாதோ—வின்ப
மாக்கிடச் சொல்லுத லொண்ணாதோ. 10.

தீரப்பெ ருந்தவச் சிட்டர்கு ழாமிகச்
சேர்த்தநெல் லைப்பதிச் சண்முகவேள்
பாரக்கிரி நேர்வெற்றித் லாவித்திகழ் தோளுற்றுள
பவளத்தி ருநிற வாரணமே—நல்ல
தவளத்தி ருநிற வாரணமே. 11.

ஆறுதி னங்கூடிச் சட்டியில் வேற்படை
யாற்கீறு சூநடற் பாதியிலே
வீறுற்றவிர் சேவற்கொடி யேசிற்றடி யேனுக்குள
வினையாகி லுங்கெடுத் தாளவாயே—யருள்
தினையாகி லுங்கொடுத் தாள்வாயே. 12.

முற்றிற்று.

சேவற் கொடியோன் திருமல ரடிதுணை.

கந்தரனுபூதி.
(பிரார்த்தனை.)

"ஆடும் பரிவே லணிசே வலெனப்
பாடும் பணியே பணியா வருள்வாய்
தேடுங் கயமா முகனைச் செருவிற்
சாடுந் தனியா னைசகோ தரனே."

வேலுமயிலும்!

செ. கவிராஜ பண்டாரத்தையா அவர்கள் இயற்றியது.

## திருமலை முருகன் பிள்ளைத்தமிழ்.

### சிறுபறைப் பருவம்.

வள்ளிமலை தனின்முதிய சிவமுனிவன் முன்னமொரு
மான்வந் துலாவமானை
மாமுனிவ னயனத்தி னூற்புணர்ந் திடவதன்
வயிற்றிடை கருப்பமாகித்;
துள்ளியயர் வோடுவயி றீற்றுழைந் தீன்றெயினர்
தொட்டகுழி யிட்டகலவுந்
துங்கச்சி லைக்குறவர் மாகதச் சிலையெனத்
தோகையைக் கண்டெடுத்து;
விள்ளுமுவ கைக்கடல் படிந்தவர்கள் சிற்றூரில்
விரைவினொடு கொண்டுவந்து
வீறுடன் வளர்த்துத் தினைப்புனத் தினில்வைத்த
வேட்டுவ மடந்தையையாற்;
றெள்ளுதினை மாவுக்க வாவுற்ற மோகனே
சிறுபறை முழக்கியருளே
செழுமறை முழக்கமுறு திருமலை யருட்குமா
சிறுபறை முழக்கியருளே.

### அருணகிரிநாதர் (திருமலை) திருப்புகழ்.

ஒருபது மிருபது மறுபது முடனறு
முணர்வுற இருபத முளநாடி
உருகிட முழுமதி தழலென வொளிதிகழ்
வெளியொடு வொளிபெற விரவாதே;
தெருவினில் மரமென எவரொடு முரைசெய்து
திரிதொழி லவமது புரியாதே
திருமகள் மருவிய திரள்புய அறுமுக
தெரிசனை பெற அருள் புரிவாயே;
பரிவுட னழகிய பழமொடு கடலைகள்
பயறொடு சிலவகை பணியாரம்
பருகிடு பெருவயி றுடையவர் பழமொழி
எழுதிய கணபதி யிளையோனே;
பெருமலை யுருவிட அடியவ ருருகிட
பிணிகெட அருள்தரு குமரேசா

பிடியொடு களிறுகள் நடையிட கலைதிரள்
பிணையமர் திருமலை பெருமாளே.

திருமலைக் குமரன் திருத்தாளே துணை!

கோ. ச. சண்முகதாச பிள்ளையவர்கள் இயற்றியது.

திருப்பணி ஆறுமுகநயினார்,

முத்தப் (பிள்ளைத்தமிழ்) பருவம்.

சித்தியை விழைந்தத்தி யைக்காத்த*முகிலெனச்
சீவகா ருணியமுற்றுத்
திருவருளை நமபியு னெழுத்தாறு மோதிச்
செழுந்தமிழ்க் கடலைநீந்தி
முத்திநெறி காட்டுசதுர் வேதாக மங்கூறு
முறைமைதவ ருதுசென்று
முதிர்மாத வம்புரிந் துயுமுருகதாசமா
முனிவனை யுண்மைமனுவை
யத்தினத் தோதுவித் தென்னையொரு தொண்டனா
யாண்டருள வுண்மையாகி
‡ லானேறு தந்தையும் பச்சைநிற மாதாவு
மருகிற்கு லாவுகின்ற
பத்தினிய ரிருபேரு முத்தமிடு கின்றநின்
பவளவாய் முத்தமருளே
பலவளந் திகழ் திருநெல்வேலி வளர் கந்தனே
பவளவாய் முத்தமருளே

* முகில்—மேகம். ‡ ஆனேறு—எருது.

## திருப்புகழ்.

ஆலம்வி ழிச்சித் திரமானார்— ஆசைவ லைப்பட் டுழலாதே;
சீலமயிற்புட் பரிமேலே — சேவையெ னக்குத் தருவாயே;
நீலநி றப்பொற் குறமான்மேல்-நேசமி குத்துப் பணிவோனே;
வேலணி மற்கைக் குகவேளே-வேணுவ னத்துப் பெருமாளே.

## வாழ்த்து.

மூவிரு முகங்கள் போற்றி முகம்பொழி கருணை போற்றி
யேவருந் துதிக்க நின்ற விராறுதோள் போற்றி காஞ்சி
மாவடி வைகுஞ் செவ்வேள் மலரடி போற்றி யன்னான்
சேவலு மயிலும் போற்றி திருக்கைவேல் போற்றி போற்றி.

திருப்பணி யாண்டவன் திருவடிசரணம்.

---

ஆறுமுகனருட் கழகம், நெல்லை.

# அறிவிப்பு.

| | | |
|---|---|---|
| 1. | கிளிக்கண்ணி, திருப்புகழ். (ஸ்ரீ முருகன் திருவுருப்படத்துடன்) | ரூ 0—2—0 |
| 2. | சுப்ரமண்ய சகஸ்ரநாம ஸ்தோத்திரம் கிரந்தத்தில் (மார்க்கண்டேய புராணத்திற் கூறப்பட்டுளது) | ,, 0—4—0 |
| 3. | மயிற்கும்மி, சேவற்கும்மி. ஸ்ரீ முருகன் அழகிய (ஆப்டோன்) படத்துடன். | ,, 0—2—0 |
| 4. | நெல்லை, மேலக்கோபுரவாசல், ஸ்ரீ சஷ்டி விநாயகர் திருவுருப்படம். | ,, 0—1—0 |
| 5 | திருப்பணி ஸ்ரீ ஆறுமுகநயினர், மூலஸ்தானத் திருவுருப்படம். | ,, 0—2—0 |
| 6. | மதுரைச்சொக்கலிங்கப்பெருமான் பிட்டு(நொண்டி)ச்சிந்து (பல அற்புதப் பாடல்களுடன்) | ,, 0—1—0 |

சிந்துகவி,
மா. இராஜகோபாலபிள்ளை,
காரியதரிசி.

திருப்பணிப்பணிவிடை,
ஏழை,
அம்மாவாசைப் பரதேசி,
தலைவர்.

## திருப்பணி ஸ்ரீ ஆறுமுகநயினர் சந்நிதானம், திருநெல்வேலி.

ஷை சந்நிதான மேலக்கோபுரவாசலில் வடபக்கம் 5-ம் நிர் கட்டிடத்தில் 'மெய்ஞ்ஞான பண்டிதன் தர்ம வைத்திய சாலையில்' எல்லாவியாதிகளுக்கும், குழந்தைகளுக்கும் மருந்துகள் கொடுக்கப்படும். ☞ விஷப்பார்வையும் பார்க்கப்படும்.

தி. ஆ. சந்நிதானம்,
திருநெல்வேலி.

ஏழை, அம்மாவாசைப் பரதேசி,
வைத்தியசாலை அதிபர்.